Sri VKR

# श्री संक्षेप-सुन्दरकाण्डम्

# ஸ்ரீ ஸங்க்ஷேப ஸுந்தரகாண்டம்

உரை ஆசிரியர் அண்ணா



வெளியீடு
பவானி புக் சென்டர்
சென்னை-33

த்யானமூலம் குரோர்-மூர்த்தி :
பூஜாமூலம் குரோ : பதம் |
மந்த்ரமூலம் குரோர்-வாக்யம்
முக்திமூலம் குரோ ; க்ருபா ||

தியானத்திற்கு மூலம் குருவின் மூர்த்தி. பூஜைக்கு மூலம் குருவின் பாதம். மந்திரத்திற்கு மூலம் குருவின் வாக்கியம். முக்திக்கு மூலம் குருவின் கிருபை.

— குருகீதை (ஸ்காந்தம்)

# श्री संक्षेप-सुन्दरकाण्डम्

# ஸ்ரீ ஸங்க்ஷேப - ஸுந்தர காண்டம்



பவானி புக் சென்டர்

ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,

சென்னை-600 033.

## பதிப்புரை

ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரியார் அவர்களின் அருளாணையைச் சிரமேற்கொண்டு ஆன்மீக நூல்களைப் பதிப்பித்து வரும் பவானி புக் சென்டரின் வெளியீடாக ஸங்க்ஷேப-ஸுந்தர காண்டம் வெளிவருவதை வாசகர்களுக்குத் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகிறோம்.

இராமாயணம் முழுவதையும் படிக்க அவகாசமில்லாதோர் தங்கள் நோய் தீரவும், நீண்ட ஆயுள் பெறவும், பகை ஒழியவும், குடும்பச் சச்சரவுகள் நீங்கவும், எடுத்த காரியம் கைகூடவும், தெய்வீகச் சக்தி பெறவும் இந்நூலைப் பாராயணம் செய்தால் போதும்.

ஆன்மீக நூல்கள் பெரும்பாலானவற்றுக்குத் தேர்ந்த உரையெழுதியுள்ள, எல்லோராலும் அன்புடன் 'அண்ணா' என்று அழைக்கப்படுகிற ஸ்ரீ சுப்ரமண்ய அய்யர் அவர்கள் தமக்கேயுரிய பாண்டித்யத்துடன் எளிய நடையில் ஸங்க்ஷேப சுந்தர காண்டத்தைச் சிறப்பாக எழுதி வழங்கியுள்ளார்கள்.

முக்கியமான சுலோகங்கள் தேவநாகரியிலும் தமிழிலும் உரையுடன் இதில் அடங்கியுள்ளன.

இந்நூலைப் பெற்றுப் பாராயணம் செய்து எல்லாச் செல்வமும் அடையும்படி ஆன்மீக அன்பர்களை அன்புடன் அழைக்கிறோம்.

பதிப்பகத்தார்

# முகவுரை

ஸ்ரீமத் ராமாயணம் ஆயுளையும் ஆரோக்கியத்தையும் புகழையும் வளர்ப்பது, சகோதர ஒற்றுமையை வளர்ப்பது, நல்ல புத்தியையும் மங்களத்தையும் அளிப்பது; நன்மையின் நிறைவை நாடும் நல்லோர்கள் இதை பக்தி சிரத்தையுடன் படிக்க வேண்டும், கேட்க வேண்டும் என்று ஆதிகவி வால்மீகி ரிஷி கூறுகிறார்.

இராமாயணத்தை முழுவதும் படிக்க அவகாசமில்லாதவர்கள் ஸுந்தர காண்டத்தை மட்டும் படிக்கலாம். அதுவும் இயலாதவர்கள் சுருக்கமான ஸங்க்ஷேப ஸுந்தர காண்டத்தை நாள் தோறும் படிக்கலாம். அதற்கு உதவியாக இச்சிறு நூலில் முக்கியமான சுலோகங்கள் ~~ஸம்ஸ்க~~ நாகரத்திலும் தமிழிலும் உரையுடன் அச்சிடப்பட்டிருக்கின்றன.

'ஸ்ரீஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத ஸ்ரீராம சந்த்ர ப்ரஸாத த்வாரா ஸர்வாரிஷ்ட நிவாரணார்த்தம் ஸர்வா பீஷ்டஸித்த்யர்த்தம் அரோக திடகாத்ர ஸித்த்யர்த்தம் ஸர்வமங்களா வாப்த்யர்த்தம் ஸங்க்ஷேப ஸுந்தர காண்ட பாராயணம் கரிஷ்யே' என்று ஸங்கல்பம் செய்து கொண்டு ராம நாம ஜபம் செய்துவிட்டுச் சுலபமாகப் பாராயணத்தைத் தொடங்கலாம். ஸ்ரீ ராமருக்கு தூபதீப நைவேத்ய நீராஜன நமஸ்காரங்களுடன் பூர்த்தி செய்யலாம்.

இந்தப் பாராயணத்தால் தீராத நோய்கள் தீரும், நீண்ட ஆயுள் சித்திக்கும், பகை ஒழியும், குடும்பச் சச்சரவுகள் நீங்கும், எடுத்த காரியங்கள் கைகூடும், தெய்வீக சக்தி ஏற்படும் என்று வாயு புராணத்தில் உமா ஸம்ஹிதை கூறுகிறது.

'நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
திண்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
ஜன்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே ராம என்ற இரண்டெழுத்தினால்'

என்கிறார் கம்பர்.

இந்நூலை வெளியிட ஊக்குவித்த நண்பர் ஸ்ரீ ஸீதாராமன் அவர்களுக்கும் அச்சுப்பிழை திருத்திய பிரம்மஸ்ரீ வழுத்தூர் ராஜகோபால சர்மா அவர்களுக்கும் அச்சிட்டுத்தந்த பவானி புக் ஸெண்டர் ஸ்ரீ அருணாசலம் அவர்களுக்கும் இதைப் பயன் படுத்திப் புண்ணியத்தை வளர்க்கும் அன்பர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீராமகிருஷ்ண மாணவரில்லம் — அண்ணா
சென்னை-4 — உரையாசிரியர்
1-1-1987

॥ श्रीः ॥

# श्री संक्षेप-सुन्दरकाण्डम्

# ஸ்ரீ ஸங்க்ஷேப - ஸுந்தர காண்டம்

## ॥ ध्यान-श्लोकाः ॥

## தியான சுலோகங்கள்

**கணபதி**

(1)

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्नवदनं ध्यायेत् सर्वविघ्नोपशान्तये ॥

ஸுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம் ।
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோபசாந்தயே ॥

எங்கும் நிறைந்தவரும் (எனினும் அன்பர்க்குகந்த வடிவம் ஏற்பவரும்) வெண்மையான ஆடை உடுத்தவரும், நிலவு போன்ற ஒளி படைத்தவரும், நான்கு கைகள் உள்ளவரும், ஆனந்தம் பொங்கும் முக மண்டலத்தை உடையவரும் ஆகிய கணபதியை எல்லா இடையூறுகளும் விலகுவதற்காக தியானம் செய்ய வேண்டும்.

ஸரஸ்வதி (2)

दोर्भियुक्ता चतुर्भिः स्फटिक-मणीमयी-मक्षमालां दधाना
हस्तेनैकेन पद्मं सितमपि च शुकं पुस्तकं चापरेण ।
भासा कुन्देन्दु-शंखस्फटिक-मणिनिभा भासमानाऽसमाना
सा मे वाग्देवतेयं निवसतु वदने सर्वदा सुप्रसन्ना ॥

தோர்ப்பிர்யுக்தா சதுர்ப்பிஃ ஸ்படிக-மணீமயீ-மக்ஷமாலாம் ததானா
ஹஸ்தேனைகேன பத்மம் ஸிதமபி ச சுகம் புஸ்தகஞ்சாபரேண ।
பாஸா குந்தேந்து-சங்க ஸ்படிக-மணிநிபா பாஸமானா(அ)ஸமானா
ஸா மே வாக்தேவதேயம் நிவஸது வதனே ஸர்வதா ஸுப்ரஸன்னா॥

நான்கு கைகளுடன் கூடியவளும் ஸ்படிக மணிகளாலான அக்ஷ மாலையை ஒரு கையிற் கொண்டவளும், மற்ற கைகளில் வெள்ளைத் தாமரை, கிளி, புஸ்தகம் ஆகியவற்றைக் கொண்டவளும் குருக்கத்திப்பூ, சந்திரன், சங்கு, ஸ்படிகம் இவற்றிற்கொப்பான காந்தியுடன் பிரகாசிப்பவளுமாகிய அந்த வாக்தேவதை அருள் புரிபவளாக எப்போதும் என் முகத்தில் வசிக்கட்டும்.

வால்மீகி (3)

कूजन्तं राम रामेति मधुरं मधुराक्षरम् ।
आरुह्य कविता-शाखां वन्दे वाल्मीकि-कोकिलम् ॥

கூஜந்தம் ராம ராமேதி மதுரம் மதுராக்ஷரம் ।
ஆருஹ்ய கவிதா-சாகாம் வந்தே வால்மீகி-கோகிலம் ॥

'ராம ராம' எனும் இனிய சொல்லை இனிமையாகக் கூவிக் கொண்டு கவிதையாகிற கிளையில் ஏறி அமர்ந்திருக்கும் வால்மீகி எனும் குயிலை வணங்குகிறேன்.

(4)

बाल्मीके-र्मुनिसिंहस्य कविता-वनचारिणः ।
श्रृण्वन् रामकथा-नादं को न याति परांगतिम् ।।

வால்மீகேர்-முனிஸிஹ்மஸ்ய கவிதா வனசாரிண: ।
ச்ருண்வன் ராமகதா-நாதம் கோ ந யாதி பராங்கதிம் ।।

கவிதையாகிற வனத்தில் சஞ்சரிக்கும் வால்மீகி எனும் முனிச் சிங்கத்தின் ராம கதையாகிற நாதத்தைக் கேட்டு யார் தான் சிறந்த கதியை அடையமாட்டார்?

(5)

यः पिबन् सततं राम-चरितामृत-सागरम् ।
अतृप्तस्तं मुनिं वन्दे प्राचेतस-मकल्मषम् ।।

ய: பிபன் ஸததம் ராம-சரிதாம்ருத-ஸாகரம் ।
அத்ருப்தஸ்தம் முனிம் வந்தே ப்ராசேதஸ-மகல்மஷம் ।।

பிராசேதஸின் புத்திரரும் மாசற்றவருமாகிய எவர் இடைவிடாது ராம சரித்திரமாகிய அமுதக் கடலைப் பருகியும் திருப்தி அடையவில்லையோ அந்த முனிவரை வணங்குகிறேன்.

ஹனுமார்

(6)

गोष्पदीकृत-वाराशिं मशकीकृत-राक्षसम् ।
रामायण-महामाला-रत्नं वन्देऽनिलात्मजम् ।।

கோஷ்பதீக்ருத-வாராசிம் மசகீக்ருத-ராக்ஷஸம் ।
ராமாயண மஹாமாலா-ரத்னம் வந்தே(அ)நிலாத்மஜம் ।।

கடலைக் குளம்படிபோல் செய்தவரும், அரக்கர்களைக் கொசுவைப் போல் செய்தவரும் ராமாயணமாகிற சிறந்த மாலையின் ரத்னம் போன்று விளங்குபவருமாகிய வாயு புத்திரரை வணங்குகிறேன்.

(7)

अंजनानन्दनं वीरं जानकी-शोकनाशनम् ।
कपीश-मक्षहन्तारं वन्दे लंका-भयंकरम् ।।

அஞ்ஜனு-நந்தனம் வீரம் ஜானகீசோக-நாசனம் ।
கபீச-மக்ஷஹந்தாரம் வந்தே லங்கா-பயங்கரம் ।।

அஞ்ஜனு தேவியின் ஆனந்தப் புதல்வரும், ஜானகியின் துன்பத்தைத் துடைத்தவரும், வானரத் தலைவரும், அக்ஷ குமாரனைக் கொன்றவரும் இலங்கைக்கு பயம் விளைவித்தவருமான வீரரை வணங்குகிறேன்.

(8)

उल्लंघ्य सिन्धोः सलिलं सलीलं यः शोकवह्निं जनकात्मजायाः ।
आदाय तेनैव ददाह लंकां नमामि तं प्रांजलि-रांजनेयम् ।।

உல்லங்க்ய ஸிந்தோ: ஸலிலம் ஸலீலம் ய: சோகவஹ்னிம்
ஜனகாத்மஜாயா: ।
ஆதாய தேனைவ ததாஹ லங்காம் நமாமி தம் ப்ராஞ்ஜலி-
ராஞ்ஜனேயம் ।।

கடல் நீரை விளையாட்டாகக் கடந்து, ஜானகியின் சோகமாகிற தீயை எடுத்துக்கொண்டு, அதனாலேயே இலங்கையை எவர் எரித்தாரோ அந்த ஆஞ்ஜநேயரைக் கை கூப்பி வணங்குகிறேன்.

(9)

आंजनेय-मतिपाटलाननं कांचनाद्रि-कमनीय-विग्रहम् ।
पारिजात-तरुमूल-वासिनं भावयामि पवमान-नन्दनम् ।।

ஆஞ்ஜனேய-மதிபாடலானனம் காஞ்சனாத்ரி-கமனீய-விக்ரஹம் ।
பாரிஜாத-தருமூல-வாஸினம் பாவயாமி பவமான-நந்தனம் ।।

சிவந்த முகமுடையவரும், பொன்மலை போன்று கம்பீரமான தோற்றமுடையவரும், பாரிஜாத மரத்தடியில் வசிப்பவரும், வாயு புத்திரருமாகிய ஆஞ்ஜநேயரை தியானிக்கிறேன்.

## (10)

यत्र यत्र रघुनाथ-कीर्तनं तत्र तत्र कृतमस्तकांजलिम् ।
बाष्पवारि-परिपूर्ण-लोचनं मारुतिं नमत राक्षसान्तकम् ।।

யத்ர யத்ர ரகுநாத-கீர்த்தனம் தத்ர தத்ர க்ருத-மஸ்தகாஞ்ஜலிம் ।
பாஷ்பவாரி-பரிபூர்ணலோசனம் மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் ॥

எங்கெங்கு ஸ்ரீராமருடைய புகழ் பாடப்படுகிறதோ அங்கங்கு சிரமேற்கூப்பிய கையுடனும் ஆனந்தபாஷ்பக் கண்ணுடனும் தோன்றுபவரும், அரக்கர்களுக்கு யமனைப் போன்றவருமாகிய வாயு புத்திரரை வணங்குகிறேன்.

## (11)

मनोजवं मारुत-तुल्य-वेगं जितेन्द्रियं बुद्धिमतां वरिष्ठम् ।
वातात्मजं वानरयूथ-मुख्यं श्रीरामदूतं शिरसा नमामि ।।

மனோஜவம் மாருத-துல்ய-வேகம் ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம் ।
வாதாத்மஜம் வாநரயூத-முக்யம் ஸ்ரீராமதூதம் சிரஸா நமாமி ॥

வாயு வேகமும் மனோவேகமும் படைத்தவரும், இந்திரியங்களை வென்றவரும், புத்திமான்களிற் சிறந்தவரும், வானரக் கூட்டத்தின் தலைவரும், ஸ்ரீராம தூதருமாகிய வாயு புத்திரரைத் தலையால் வணங்குகிறேன்.

## (12)

बुद्धिर्बलं यशो धैर्यं निर्भयत्व-मरोगता ।
अजाड्यं वाक्पटुत्वं च हनूमत्स्मरणाद्भवेत् ।।

புத்திர்-பலம் யசோ தைர்யம் நிர்ப்பயத்வ-மரோகதா ।
அஜாட்யம் வாக்படுத்வஞ்ச ஹனூமத்ஸ்மரணாத்பவேத் ॥

புத்தி, பலம், புகழ், தைரியம், பயமின்மை, நோயின்மை, சுறுசுறுப்பு, சொல் வன்மை எல்லாம் ஹனுமாரை தியானிப்பதால் சித்திக்கும்.

## (13)

ख्यातः श्रीरामदूतः पवनतनुभवः पिङ्गलाक्षः शिखावान्
सीता-शोकापहारी दशमुख-विजयी लक्ष्मणः-प्राणदाता ।
आनेता भेषजाद्रे-र्लवणजलनिधे-र्लंघने दीक्षितो यः
वीरः श्रीमान् हनूमान् मम मनसि वसन् कार्यसिद्धिं तनोतु ।।

க்யாத: ஸ்ரீராமதூத: பவனதனுபவ: பிங்கலாக்ஷ: சிகாவான்
ஸீதா-சோகாபஹாரீ தசமுக-விஜயீ லக்ஷ்மண: ப்ராணதாதா ||
ஆநேதா பேஷஜாத்ரேர்-லவணஜலநிதேர்-லங்கனே தீக்ஷிதோ ய:
வீர: ஸ்ரீமான் ஹனூமான் மம மனஸி வஸன் கார்யஸித்திம் தநோது ||

ஸ்ரீராமதூதர் எனப் பெயர் பெற்றவரும், வாயு புத்திரரும், பிங்கல வர்ணமான கண்ணும் சிகையும் உடையவரும், ஸீதையின் சோகத்தைப் போக்கியவரும், ராவணனை வென்றவரும், லக்ஷ்மணருக்கு உயிரளித்தவரும், சஞ்சீவி மலையைக் கொணர்ந்தவரும் உப்புக்கடலைத் தாண்ட தீக்ஷை பூண்டவரும் ஆகிய வீரச் சீமான் ஹனுமான் எனது மனதிலிருந்து கொண்டு காரிய சித்தியை அளிக்கட்டும்.

## (14)

दूरीकृत-सीतार्तिः प्रकटीकृत-रामवैभव-स्फूर्तिः ।
दारित-दशमुख-कीर्तिः पुरतो मम भातु हनुमतो मूर्तिः ।।

தூரீக்ருத-ஸீதார்த்தி: ப்ரகடீக்ருத-ராம வைபவ-ஸ்பூர்த்தி: |
தாரித-தசமுக-கீர்த்தி: புரதோ மம பாது ஹனுமதோ மூர்த்தி: ||

ஸீதையின் துன்பத்தைத் துடைத்தவரும், ஸ்ரீராம வைபவப் பெருமையைப் பிரகடனம் செய்தவரும், ராவணனுடைய கீர்த்தியை அழித்தவரும் ஆகிய ஹனுமாருடைய திருவுருவம் என் முன்னிருந்து காப்பாற்றட்டும்.

ராமாயணம்

(15)

वाल्मीकि-गिरिसंभूता रामसागर-गामिनी ।
पुनातु भुवनं पुण्या रामायण-महानदी ।।

வால்மீகி-கிரிஸம்பூதா ராமஸாகர-காமினீ |
புனாது புவனம் புண்யா ராமாயண-மஹாநதீ ||

வால்மீகியெனும் மலையிலிருந்து உற்பத்தியானதும் ராமன் எனும் சமுத்திரத்தை நோக்கிப் பாய்வதும் ஆகிய ராமாயணம் எனும் புண்ணிய மகாநதி உலகைப் புண்ணியமாக்கட்டும்.

(16)

वेदवेद्ये परे पुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्राचेतसा-दासीत् साक्षाद्रामायणात्मना ।।

வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே |
வேத: ப்ராசேதஸா-தாஸீத் ஸாக்ஷாத்-ராமாயணாத்மனா ||

வேதத்தினால் உணரப்படும் பரம புருஷன் தசரத புத்திரனாகத் தோன்றியபொழுது வேதம் வால்மீகியிடமிருந்து ராமாயண வடிவில் தோன்றிற்று.

ஸ்ரீராமர்

(17)

वैदेही-सहितं सुरद्रुमतले हैमे महा-मण्डपे
मध्ये-पुष्पक-मासने मणिमये वीरासने सुस्थितम् ।
अग्रे वाचयति प्रभंजन-सुते तत्त्वं मुनिभ्यः परं
व्याख्यान्तं भरतादिभिः परिवृतं रामं भजे श्यामलम् ।।

வைதேஹீ-ஸஹிதம் ஸுரத்ருமதலே ஹைமே மஹா-மண்டபே
மத்த்யே புஷ்பக-மாஸனே மணிமயே வீராஸனே ஸுஸ்திதம் ||

அக்ரே வாசயதி ப்ரபஞ்ஜன-ஸுதே தத்வம் முனிப்ப்ய: பரம்
வ்யாக்க்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ச்யாமளம் ||

கற்பக விருக்ஷத்தின் அடியில் அமைந்த ஸ்வர்ண மண்டபத்தின் நடுவில் மணிமயமான ஆஸனத்தில் வீராஸனமிட்டு ஸீதாதேவி யுடன் அழகாக வீற்றிருப்பவரும், முன்னிருந்து ஆஞ்ஜநேயர் கேட்கத் தத்துவத்தை முனிவர்களுக்கு விளக்கிக் கூறுபவரும், பரதன் முதலியவர்களால் சூழப்பெற்றவரும், சியாமளவர்ணரும் ஆகிய ஸ்ரீராமரைப் போற்றுகின்றேன்.

(18)

नमोऽस्तु रामाय सलक्ष्मणाय देव्यै च तस्यै जनकात्मजायै ।
नमोऽस्तु रुद्रेन्द्र-यमानिलेभ्यो नमोऽस्तु चन्द्रार्क-मरुद्गणेभ्यः ।।

நமோ(அ)ஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய தேவ்யை ச தஸ்யை
ஜனகாத்மஜாயை ।

நமோ(அ)ஸ்து ருத்ரேந்த்ர-யமாநிலேப்ப்யோ நமோ(அ)ஸ்து
சந்த்ரார்க்க-மருத்கணேப்ப்ய: ||

லக்ஷ்மணருடன் கூடிய ஸ்ரீராமருக்கு நமஸ்காரம். ஜனக புத்திரி யான அவருடைய தேவிக்கு நமஸ்காரம். ருத்ரன், இந்திரன், யமன், வாயு ஆகியோர்க்கும் சந்திரன், சூரியன், மருத்கணங்கள் ஆகியோர்க்கும் நமஸ்காரம்.

———

ஸ்ரீ ராம ஜய ராம ஜய ஜய ராம

———

# ॥ श्री संक्षेप-सुन्दरकाण्डम् ॥

# ஸ்ரீ ஸங்க்ஷேப ஸுந்தர காண்டம்

## (1)

ततो रावणनीतायाः सीतायाः शत्रु-कर्शनः ।
इयेष पदमन्वेष्टुं चारणाचरिते पथि ॥

ததோ ராவணநீதாயா: ஸீதாயா: சத்ரு-கர்சன: ।
இயேஷ பதமந்வேஷ்டும் சாரணாசரிதே பதி ॥ 1.1 ॥

சாரணர் என்னும் தேவர்கள் சஞ்சரிக்கும் ஆகாய மார்க்கத்தில் இராவணனால் கவரப்பட்ட ஸீதையின் இருப்பிடத்தைத் தேடப் பகைவர்களையழிக்கும் ஆஞ்ஜனேயர் புறப்பட்டார்.

## (2)

यथा राघव-निर्मुक्तः शरः श्वसनविक्रमः ।
गच्छेत्तद्वद्गमिष्यामि लंकां रावणपालिताम् ॥

யதா ராகவ-நிர்முக்த: சர: ச்வஸனவிக்ரம: ।
கச்சேத்தத்வத் கமிஷ்யாமி லங்காம் ராவணபாலிதாம் ॥ 1.39 ॥

ஸ்ரீராமர் விட்ட பாணம் காற்றினும் கடிய வேகத்துடன் எங்ஙனம் செல்லுமோ அங்ஙனம் நான் ராவணன் பாலிக்கும் லங்கைக்குப் போவேன் என்றார்.

(3)

प्रविश्य नगरीं लंकां कपिराज-हितंकरः ।
चक्रेऽथ पादं सव्यं च शत्रूणां स तु मूर्धनि ।।

ப்ரவிச்ய நகரீம் லங்காம் கபிராஜ-ஹிதங்கர: |
சக்ரே(அ)த பாதம் ஸவ்யஞ்ச சத்ருணும் ஸ து மூர்த்தனி || 4.3 ||

வானர மன்னருக்கு நன்மை புரியும் மந்திரியான அவர் (கடலை விரைவில் தாண்டி) இலங்கை நகரில் புகுந்து பகைவர்களின் தலை மேல் காலை வைப்பது போல் தமது இடது பாதத்தை முதலில் அங்கு வைத்தார்.

(4)

प्रविशन्निष्पतंश्चापि प्रपतन्नुत्पतन्नपि ।
सर्वमप्यवकाशं स विचचार महाकपिः ।।

ப்ரவிசந்-நிஷ்பதம்ச்சாபி ப்ரபதந்நுத்பதந்நபி |
ஸர்வமப்யவகாசம் ஸ விசசார மஹாகபி. || 12.16 ||

பல இடங்களில் மேலே ஏறுவதும் கீழே குதிப்பதும் நிற்பதும் திரும்பத் திரும்பப் போவதுமாக அம்மகா வானரர் அங்கு எல்லா இடங்களிலும் (ஸீதையை) தேடிச் சஞ்சரித்தார்.

(5)

दृष्टमन्त:पुरं सर्वं दृष्टा रावण-योषितः ।
न सीता दृश्यते साध्वी वृथा जातो मम श्रमः ।।

த்ருஷ்டமந்த:புரம் ஸர்வம் த்ருஷ்டா ராவண-யோஷித: |
ந ஸீதா த்ருச்யதே ஸாத்வீ வ்ருதா ஜாதோ மம ச்ரம: || 12.6 ||

அந்தப்புரம் முழுதும் பார்த்தாயிற்று. ராவணனுடைய ஸ்திரீகளையெல்லாம் பார்த்தேன். பதிவிரதையான ஸீதையைக் காணவில்லை. நான் பட்ட கஷ்டம் வீணாகிவிட்டது. (என்று வருந்தினார்.)

## (6)

अशोकवनिका चेयं दृश्यते या महाद्रुमा ।
इमामभिगमिष्यामि न हीयं विचिता मया ।।

அசோகவநிகா சேயம் த்ருச்யதே யா மஹாத்ருமா ।
இமாமபிகமிஷ்யாமி ந ஹீயம் விசிதா மயா ।। 13.55 ।।

சிறந்த மரங்கள் நிறைந்த அசோகவனம் ஒன்று இதோ காணப் படுகிறது. இதற்குள் போய்ப் பார்க்கலாம். இது இதுவரை தேடப் படவில்லை (என்று அதில் புகுந்தார்).

## (7) - (8)

अशोकवनिकायां तु तस्यां वानरपुङ्गवः ।
ततो मलिनसंवीतां राक्षसीभिः समावृताम् ।।
उपवासकृशां दीनां निःश्वसन्तीं पुनः पुनः ।
ददर्श शुक्लपक्षादौ चन्द्ररेखामिवामलाम् ।।

அசோகவநிகாயாம் து தஸ்யாம் வானரபுங்கவः ।
ததோ மலினஸம்வீதாம் ராக்ஷஸீபி: ஸமாவ்ருதாம் ।।
உபவாஸக்ருசாம் தீனாம் நி:ச்வஸந்தீம் புன: புன: ।
ததர்ச சுக்லபக்ஷாதௌ சந்த்ரரேகாமிவாமலாம் ।। 15.18-19 ।।

அவ்வானர சிரேஷ்டர் அந்த அசோகவனத்தில் அப்பொழுது மாசடைந்த ஆடையுடன் அரக்கிகளால் சூழப்பட்டுப் பட்டினியால் மெலிந்து எளிமை நிலையில் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு சுக்லபக்ஷ ஆரம்பத்தில் சந்திரகலையைப் போலிருந்த ஒரு ஸ்திரீயைக் கண்டார்.

(9)

तां समीक्ष्य विशालाक्षी-मधिकं मलिनां कृशाम् ।
तर्कयामास सीतेति कारणै-रुपपादिभिः ।।

தாம் ஸமீக்ஷ்ய விசாலாக்ஷீ-மதிகம் மலினாம் க்ருசாம் ।
தர்க்கயாமாஸ ஸீதேதி காரணை-ருபபாதிபி: ॥ 15.26 ॥

பரந்த கண் படைத்தவளும் மிகவும் மெலிந்து மாசடைந்து காணப்பட்டவளுமான அவளை உற்று நோக்கிப் பொருத்தமான காரணங்களால் அவள் ஸீதையாயிருக்கலாம் என்று ஊகித்தார்.

(10)

अस्या देव्या मनस्तस्मिंस्तस्य चास्यां प्रतिष्ठितम् ।
तेनेयं स च धर्मात्मा मुहूर्तमपि जीवति ।।

அஸ்யா தேவ்யா மனஸ்தஸ்மிம் ஸ்தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்ட்டிதம் ।
தேநேயம் ஸ ச தர்மாத்மா முஹூர்த்தமபி ஜீவதி ॥ 15.51 ॥

இந்த தேவியின் மனது ஸ்ரீராமரிடத்தில் நிலைபெற்றிருக்கிறது. அவருடைய மனதும் இந்த தேவியிடம் நிலைத்திருக்கிறது. அதனால் தான் இவளும் அந்த தர்மாத்மாவும் சிறிது நேரமாவது ஜீவித்திருக்கிறார்கள்.

(11)

एवं सीतां तदा दृष्ट्वा हृष्टः पवनसंभवः ।
जगाम मनसा रामं प्रशशंस च तं प्रभुम् ।।

ஏவம் ஸீதாம் ததா த்ருஷ்ட்வா ஹ்ருஷ்ட: பவனஸம்பவ: ।
ஜகாம மனஸா ராமம் ப்ரசசம்ஸ ச தம் ப்ரபும் ॥ 15.54 ॥

இவ்வாறு (மறைவிலிருந்து கொண்டு) ஸீதையைக் கண்டு மகிழ்வுற்று ஹனுமார் ஸ்ரீராமரை மனதால் நாடி (ஸீதைக்குத் தேறுதலளிக்க) அந்தப் பிரபுவைத் துதிக்கலானார்.

(12)

राजा दशरथो नाम रथकुंजर-वाजिमान् ।
तस्य पुत्रः प्रियो ज्येष्ठ-स्ताराधिप-निभाननः ।।

ராஜா தசரதோ நாம ரதகுஞ்ஜர-வாஜிமான் ।
தஸ்ய புத்ர: ப்ரியோ ஜ்யேஷ்ட-ஸ்தாராதிப-நிபானன: ॥ 31.2-6 ॥

தேர் யானை குதிரைப் படைகளுடன் கூடிய அரசர் தசரதர் புகழ் படைத்தவர். அவருடைய மூத்த குமாரர் சந்திரன் போன்ற முகம் படைத்தவர், அவருக்கு மிகப் பிரியமானவர்.

(13)

रामो नाम विशेषज्ञः श्रेष्ठः सर्व-धनुष्मताम् ।
तस्य सत्याभिसन्धस्य वृद्धस्य वचनात् पितुः ।
सभार्यः सह च भ्रात्रा वीरः प्रव्राजितो वनम् ।।

ராமோ நாம விசேஷஜ்ஞ: ச்ரேஷ்ட: ஸர்வ-தனுஷ்மதாம் ।
தஸ்ய ஸத்யாபிஸந்தஸ்ய வ்ருத்தஸ்ய வசனாத் பிது: ।
ஸபார்ய: ஸஹ ச ப்ராத்ரா வீர: ப்ரவ்ராஜிதோ வனம் ॥ 31.6-8 ॥

இராமர் எனப் பெயர் பெற்ற அவர் சிறந்த அறிவாளி. வில்லாளிகளில் எல்லாம் மேம்பட்டவர். கிழவரும் ஸத்திய ஸந்தருமான தமது தந்தையின் வார்த்தையைக் காப்பாற்றத் தம்பியுடனும் மனைவியுடனும் அவ் வீரர் வனமேகினர்.

(14)

ततस्त्वमर्षापहृता जानकी रावणेन तु ।
स मार्गमाणस्तां देवीं रामः सीता-मनिन्दिताम् ।
आससाद वने मित्रं सुग्रीवं नाम वानरम् ।।

ததஸ்த்வமர்ஷாபஹ்ருதா ஜானகீ ராவணேன து ।
ஸ மார்க்கமாணஸ்-தாம் தேவீம் ராம: ஸீதா-மநிந்திதாம் ।
ஆஸஸாத வனே மித்ரம் ஸுக்ரீவம் நாம வானரம் ॥ 31.10-11 ॥

(தன்னுடைய படை ஜனஸ்தானத்தில் ராமரால் அழிக்கப் பட்டதைக் கேட்டு) கோபம் மூண்ட ராவணனால் ஜானகி அபகரிக்கப் பட்டாள். அந்தக் குற்றமற்ற ஸீதா தேவியைத் தேடுகையில் ஸ்ரீராமர் வனத்தில் ஸுக்ரீவன் என்ற வானரரை நண்பராக அடைந்தார்.

## (15)

सुग्रीवेणापि सन्दिष्टा हरयः कामरूपिणः ।
दिक्षु सर्वासु तां देवीं विचिन्वन्ति सहस्रशः ।।

ஸுக்ரீவேணாபி ஸந்திஷ்டா ஹரய: காமரூபிண: ।
திக்ஷு ஸர்வாஸு தாம் தேவீம் விசின்வந்தி ஸஹஸ்ரச: ॥ 31.13 ॥

ஸுக்ரீவரால் ஏவப்பட்ட வானரர்கள் விரும்பிய உருவேற்கக் கூடியவர்கள், ஆயிரக்கணக்காக எல்லாத் திக்குகளிலும் அந்த தேவியைத் தேடுகிறார்கள்.

## (16)

अस्या हेतो-र्विशालाक्ष्याः सागरं वेगवान् प्लुतः ।
यथा रूपां यथा वर्णां यथा लक्ष्मीं च निश्चिताम् ।
अश्रौषं राघवस्याहं सेयमासादिता मया ।।

அஸ்யா ஹேதோர்-விசாலாக்ஷ்யா: ஸாகரம் வேகவான் ப்லுத: ।
யதா ரூபாம் யதா வர்ணாம் யதா லக்ஷ்மீஞ்ச நிச்சிதாம் ।
அச்ரௌஷம் ராகவஸ்யாஹம் ஸேயமாஸாதிதா மயா ॥ 31.14-15 ॥

அந்த விசாலாக்ஷியின் பொருட்டுத்தான் வேகம் படைத்த நான் கடலைத் தாண்டினேன். ஸ்ரீராமரிடமிருந்து அந்த தேவியின் ரூபமும் நிறமும் அழகும் எப்படிப்பட்டதென்று நிச்சயமாக நான் கேட்டிருந்தேனோ அப்படியே என்னால் காணவும் பட்டது

(17)

जानकी चापि तच्छ्रुत्वा विस्मयं परमं गता ।
सा ददर्श कपिं तत्र प्रश्रयं प्रियवादिनम् ।।

ஜானகீ சாபி தச்ச்ருத்வா விஸ்மயம் பரமம் கதா || 31.16 ||
ஸா ததர்ச கபிம் தத்ர ப்ரச்ரயம் ப்ரியவாதினம் || 32 2 ||

அதைக் கேட்ட அந்த ஸீதை மிகுந்த ஆச்சரியமடைந்து வணக்கத்துடன் பிரியத்தைப் பேசின வானரரை (மரத்தின் மேல்) கண்டாள்.

(18)

तामब्रवीन्महातेजा हनुमान् मारुतात्मजः ।
अहं रामस्य संदेशाद् देवि दूतस्तवागतः ।।

தாமப்ரவீன்மஹாதேஜா ஹனுமான் மாருதாத்மஜ: || 33.2 ||
அஹம் ராமஸ்ய ஸந்தேசாத் தேவி தூதஸ்தவாகத: || 34.2 ||

ஒளிமிக்க வாயு புத்திரரான ஹனுமார் (மரத்திலிருந்து இறங்கி வந்து) தேவியை நோக்கி மேலும் பின்வருமாறு கூறினார். 'தேவியே! ஸ்ரீராமருடைய கட்டளையால் தங்களிடம் தூதனாக வந்தவன் நான்.'

(19)

वैदेहि कुशली रामस्त्वां च कौशलमब्रवीत् ।
लक्ष्मणश्च महातेजा भर्तुस्तेऽनुचरः प्रियः ।।

வைதேஹி குசலீ ராமஸ்த்வாம் ச கௌசலமப்ரவீத் |
லக்ஷ்மணச்ச மஹாதேஜா பர்த்துஸ்தே(அ)னுசர: ப்ரியஃ || 34.4 ||

வைதேஹி! ஸ்ரீராமர் க்ஷேமமாயிருக்கிறார். தங்களுடைய க்ஷேமத்தையும் விசாரிக்கச் சொன்னார். தங்கள் கணவரின் பிரியரும் பின்தொடர்பவரும், தேஜஸ்வியுமான லக்ஷ்மணரும் க்ஷேமம்,

(20)

सा तयोः कुशलं देवी निशम्य नरसिंहयोः ।

प्रीति-संहृष्ट-सर्वांगी हनुमन्त-मथाब्रवीत् ।।

ஸா தயோ: குசலம் தேவீ நிசம்ய நரஸிஹ்மயோ ||

ப்ரீதி-ஸம்ஹ்ருஷ்ட ஸர்வாங்கீ ஹனுமந்த-மதாப்ரவீத் || 34.5 ||

சிங்கம் போன்ற அம் மனித சிரேஷ்டர்களின் க்ஷேமத்தைக் கேட்ட தேவியானவள் அன்பினுல் எல்லா அங்கங்களும் புளகித்து ஹனுமாரிடம் பின் வருமாறு கூறினுள்.

(21)

कल्याणी बत गाथेयं लौकिकी प्रतिभाति मा ।

एति जीवन्त-मानन्दो नरं वर्ष-शतादपि ।।

கல்யாணீ பத காதேயம் லௌகிகீ ப்ரதிபாதி மா |

ஏதி ஜீவந்த-மானந்தோ நரம் வர்ஷ-சதாதபி || 34.6 ||

மனிதன் நூறு வருஷம் கஷ்டப்பட்டாலும் உயிருடனிருந்தால் என்ருே ஒரு நாள் ஆனந்தத்தை அடைவான் என்று உலகில் வழங்கும் பேச்சு மங்களமானது என்று எனக்குத் தோன்றுகிறது.

(22)

भूय एव महातेजा हनुमान् मारुतात्मजः ।

अब्रवीत् प्रश्रितं वाक्यं सीता-प्रत्ययकारणात् ।।

राम-नामांकितं चेदं पश्य देव्यंगुलीयकम् ।

प्रत्ययार्थं तवानीतं तेन दत्तं महात्मना ।।

பூய ஏவ மஹாதேஜா ஹனுமான் மாருதாத்மஜ: |

அப்ரவீத் ப்ரச்ரிதம் வாக்யம் ஸீதாப்ரத்யய-காரணுத் ||

ராம நாமாங்கிதஞ்சேதம் பச்ய தேவ்யங்குலீயகம் ।
ப்ரத்யயார்த்தம் தவாநீதம் தேந தத்தம் மஹாத்மனு ॥ 36.1-3 ॥

மஹா தேஜஸ்வியும் வாயு புத்திரருமான ஹனுமார் ஸீதைக்கு நம்பிக்கையை திடப்படுத்தும் பொருட்டு வணக்கத்துடன் பிறகு பின்வருமாறு கூறினர். 'தேவியே! ஸ்ரீராம நாமம் பதிக்கப் பெற்ற இந்த மோதிரத்தைப் பாருங்கள். உங்களுடைய நம்பிக்கைக்காக அந்த மகாத்மாவால் கொடுக்கப்பட்டு என்னல் கொண்டுவரப் பட்டது.'

## (23)

गृहीत्वा प्रेक्षमाणा सा भर्तुः करविभूषणम् ।
भर्तारमिव संप्राप्ता जानकी मुदिताऽभवत् ॥

க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணு ஸா பர்த்து: கரவிபூஷணம் ।
பர்த்தாரமிவ் ஸம்ப்ராப்தா ஜானகீ முதிதா(அ)பவத் ॥ 36.4 ॥

நாயகரின் கரபூஷணமான அதை வாங்கிப் பார்த்து ஸீதை நாயகரையே அடைந்துவிட்டாற்போல் மகிழ்ச்சி நிறைந்தவளாளுள்.

## (24)

ततो वस्त्रगतं मुक्त्वा दिव्यं चूडामणिं शुभम् ।
प्रदेयो राघवायेति सीता हनुमते ददौ ॥

ததோ வஸ்த்ரகதம் முக்த்வா திவ்யம் சூடாமணிம் சுபம் ।
ப்ரதேயோ ராகவாயேதி ஸீதா ஹனுமதே ததௌ ॥ 38.6-7 ॥

பிறகு ஆடையில் முடிந்திருந்த தெய்வத் தன்மையும் மங்களமும் நிறைந்த சூடாமணியை அவிழ்த்தெடுத்து ஸ்ரீராமரிடம் கொடுப்பதற்காக ஹனுமாரிடம் கொடுத்தாள்.

(25)

ततस्तु हनुमान् वीरो बभंज प्रमदावनम् ।
दासोऽहं कोसलेन्द्रस्य रामस्याक्लिष्ट-कर्मणः ।
न रावण-सहस्रं मे युद्धे प्रतिबलं भवेत् ।
अर्दयित्वा पुरीं लङ्का-मभिवाद्य च मैथिलीम् ।
समृद्धार्थो गमिष्यामि मिषतां सर्व-रक्षसाम् ।।

ததஸ்து ஹனுமான் வீரோ பபஞ்ஜ ப்ரமதாவனம் ।
தாஸோ(அ)ஹம் கோஸலேந்த்ரஸ்ய ராமஸ்யாக்லிஷ்டகர்மண: ।
ந ராவண-ஸஹஸ்ரம் மே யுத்தே ப்ரதிபலம் பவேத் ।
அர்த்தயித்வா புரீம் லங்கா-மபிவாத்ய ச மைதிலீம் ।
ஸம்ருத்தார்த்தோ கமிஷ்யாமி மிஷதாம் ஸர்வரக்ஷஸாம் ।। 43.9-11 ।।

பிறகு வீர ஹனுமார் பின்வருமாறு முழங்கிக் கொண்டு அசோக வனத்தை அழிக்க முற்பட்டார். 'எளிதில் செயல்படும் கோஸல மன்னரான ஸ்ரீராமருடைய தாஸன் நான். யுத்தத்தில் ஆயிரம் ராவணர்கள் கூட எனக்கு ஈடாகமாட்டார்கள். இந்த லங்காபுரியைக் கலங்கச் செய்து மைதிலியை வணங்கிவிட்டு எல்லா அரக்கர்களும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே காரியத்தைச் சாதித்துவிட்டு நான் போகப் போகிறேன்.'

(26)

वेष्टयन्ति स्म लांगूलं जीर्णैः कार्पासकैः पटैः ।
तैलेन चाभिषिच्याथ तेऽग्निं तत्राभ्यपातयत् ।।

வேஷ்டயந்தி ஸ்ம லாங்கூலம் ஜீர்ணை: கார்ப்பாஸகை: படை: ।
தைலேன சாபிஷிச்யாத தே(அ)க்னிம் தத்ராப்யபாதயத் ।। 53.7 ।।

(அரக்கர்கள்) அவருடைய வாலில் நைந்த பருத்தித் துணிகளைச் சுற்றி எண்ணெய்யை ஊற்றி அதில் தீ மூட்டினார்கள்,

## (27)

दीप्यमाने ततस्तस्य लांगूलाग्रे हनूमतः ।
राक्षस्यस्ता विरूपाक्ष्यः शंसु-र्देव्यास्तदप्रियम् ।।

தீப்யமானே ததஸ்தஸ்ய லாங்கூலாக்ரே ஹனூமத: ।
ராக்ஷஸ்யஸ்தா விருபாக்ஷ்ய: சம்ஸுர்-தேவ்யாஸ்ததப்ரியம் ।। 53.23 ।।

பிறகு அந்த ஹனுமாருடைய வால் நுனியில் தீ கொழுந்து விட்டெரிகையில் வக்ரக்கண் படைத்த அரக்கிகள் ஸீதா தேவியிடம் அந்த துக்க சமாசாரத்தைத் தெரிவித்தார்கள்.

## (28)

मङ्गलाभिमुखी तस्य सा तदासीन्महाकपेः ।
उपतस्थे विशालाक्षी प्रयता हव्यवाहनम् ।।
यद्यस्ति पति-शुश्रूषा यद्यस्ति चरितं तपः ।
यदि वाप्येकपत्नीत्वं शीतो भव हनूमतः ।।

மங்கலாபிமுகீ தஸ்ய ஸா ததாஸீன் மஹாகபே: ।
உபதஸ்தே விசாலாக்ஷீ ப்ரயதா ஹவ்யவாஹனம் ।।
யத்யஸ்தி பதி-சுச்ருஷா யத்யஸ்தி சரிதம் தப: ।
யதி வாப்யேகபத்னீத்வம் சீதோ பவ ஹனூமத: ।। 53.26-27 ।।

அந்த ஹனுமாருக்கு மங்களத்தை விரும்பிய ஸீதை பரிசுத்த மனத்துடன் அக்னிதேவனைப் பிரார்த்திக்கலானாள். 'நான் நாயகருக்குப் பணிவிடை பக்தியுடன் செய்தது உண்மையாயிருந்தால், நான் புரிந்த தவப்பயன் இருந்தால், நான் ராமர் ஒருவருக்கே பத்னியென்பதுண்மையானால் ஹனுமாருக்கு நீ குளிர்ச்சியாக இரு.'

(29)

हनूमता वेगवता वानरेण महात्मना ।
लङ्कापुरं प्रदग्धं तद्रुद्रेण त्रिपुरं यथा ॥

ஹனூமதா வேகவதா வானரேண மஹாத்மனா ।
லங்காபுரம் ப்ரதக்தம் தத் ருத்ரேண த்ரிபுரம் யதா ॥ 54.32 ॥

பிறகு மகாத்மாவும் வானர வீரருமான ஹனுமாரால் ருத்ரரால் த்ரிபுரம் எரிக்கப்பட்டாற்போல் லங்காபுரம் எரிக்கப்பட்டது.

(30)

एवमाश्वास्य वैदेहीं हनुमान् मारुतात्मजः ।
गमनाय मतिं कृत्वा वैदेहीमभ्यवादयत् ॥
ततः स कपिशार्दूलः स्वामि-सन्दर्शनोत्सुकः ।
आरुरोह गिरिश्रेष्ठ-मरिष्ट-मरिमर्दनः ॥

ஏவமாச்வாஸ்ய வைதேஹீம் ஹனுமான் மாருதாத்மஜ: ।
கமனாய மதிம் க்ருத்வா வைதேஹீமப்ப்யவாதயத் ॥
தத: ஸ கபிசார்த்தூல: ஸ்வாமி-ஸந்தர்சனோத்ஸுக: ।
ஆருரோஹ கிரிச்ரேஷ்ட-மரிஷ்ட-மரிமர்த்தன: ॥ 56.25 ॥

இதற்குப் பின் வாயு புத்திரரான ஹனுமார் ஸீதையை தரிசித்து ஆறுதல் கூறிவிட்டுப் புறப்படுவதற்குத் தயாராகி ஸீதைக்கு அபிவாதனம் செய்தார். ஸ்வாமியை தரிசிக்க ஆவலுடனிருந்த வானர சிரேஷ்டர், சத்ருக்களை அழிப்பவர், மலைகளிற்சிறந்த அரிஷ்டபர்வதத்தின் மேல் ஏறினார்.

(31)

निपपात महेन्द्रस्य शिखरे पादपाकुले ।
दृष्टा सीतेति विक्रान्तः संक्षेपेण न्यवेदयत् ।।

நிபபாத மஹேந்த்ரஸ்ய சிகரே பாதபாகுலே ॥ 57.29 ॥
த்ருஷ்டா ஸீதேதி விக்ராந்த: ஸம்க்ஷேபேண ந்யவேதயத் ॥ 57.35 ॥

கடலைத் தாண்டி மரங்களடர்ந்த மஹேந்திர மலைச் சிகரத்தில் வந்து இறங்கினார். விக்ரமசாலியான அவர் 'கண்டேன் ஸீதையை' என்று சுருக்கமாகச் செய்தியைத் தெரிவித்தார்.

(32)

प्रीतिमन्तस्ततः सर्वे वायुपुत्र-पुरस्सराः ।
महेन्द्राद्रिं परित्यज्य पुप्लुवुः प्लवगर्षभाः ।।

ப்ரீதிமந்தஸ்ததஸ்ஸர்வே வாயு புத்ர-புரஸ்ஸரா: ।
மஹேந்த்ராத்ரிம் பரித்யஜ்ய புப்லுவு: ப்லவகர்ஷபா: ॥ 61.2 ॥

பிறகு வாயு புத்திரரை முன்னிட்டுக் கொண்டு வானரத் தலைவர்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் மகேந்திர பர்வதத்தை விட்டுக் கிளம்பிப் பறந்தார்கள்.

(33)

निपेतु-र्हरिराजस्य समीपे राघवस्य च ।
हनुमांश्च महाबाहुः प्रणम्य शिरसा ततः ।
नियता-मक्षतां देवीं राघवाय न्यवेदयत् ।।

நிபேதுர்-ஹரிராஜஸ்ய ஸமீபே ராகவஸ்ய ச ॥ 64.38 ॥
ஹனுமாம்ச்ச மஹாபாஹு: ப்ரணம்ய சிரஸா தத: ।
நியதா-மக்ஷதாம் தேவீம் ராகவாய ந்யவேதயத் ॥ 64.39 ॥

வானர மன்னரான ஸுக்ரீவருக்கும் ஸ்ரீராமருக்கும் சமீபத்தில் வந்து இறங்கினார்கள். தோள் வலிமை மிக்க ஹனுமார் தலையால் வணங்கி தேவி விரதத்தில் நிலைத்தவளாகவும் மாசற்றவளாகவும் இருப்பதை ஸ்ரீராமருக்குத் தெரிவித்தார்.

(34)

तौ जाताश्वासौ राजपुत्रौ विदित्वा तच्चाभिज्ञानं राघवाय प्रदाय ।
देव्या चाख्यातं सर्वमेवानुपूर्व्याद्वाचा संपूर्णं वायुपुत्रः शशंस ।।

தௌ ஜாதாச்வாஸௌ ராஜபுத்ரௌ விதித்வா தச்சாபிஜ்ஞானம்
ராகவாய ப்ரதாய ।

தேவ்யா சாக்க்யாதம் ஸர்வ-மேவானுபூர்வ்யாத்-வாசா ஸம்பூர்ணம்
வாயுபுத்ர: சசம்ஸ ।। 65.26 ।।

அரச குமாரர்கள் மனம் தேறியதை உணர்ந்து ஸ்ரீரா...ம் அடையாளமான சூடாமணியையும் கொடுத்து, தேவி சொன்ன வார்த்தையனைத்தையும் வரிசையாக வாயு புத்திரர் கூறி முடித்தார்.

ஸ்ரீராம பட்டாபிஷேகம்

(35)

वसिष्ठो वामदेवश्च जाबालिरथ काश्यपः ।
कात्यायनो गौतमश्च सुयज्ञो विजयस्तथा ।।
अभ्यषिंचन् नरव्याघ्रं प्रसन्नेन सुगन्धिना ।
सलिलेन सहस्राक्षं वसवो वासवं यथा ।।

வஸிஷ்டோ வாமதேவச்ச ஜாபாலிரத காச்யப: ।
காத்யாயனோ கௌதமச்ச ஸுயஜ்ஞோ விஜயஸ்ததா ।।
அப்யஷிஞ்சந் நரவ்யாக்ரம் ப்ரஸன்னேன ஸுகந்தினா ।
ஸலிலேன ஸஹஸ்ராக்ஷம் வஸவோ வாஸவம் யதா ।।

வசிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காசியபர், காத்யாயனர், கௌதமர், ஸுயக்ஞர், விஜயர் ஆகிய மஹரிஷிகள், நறுமணம் நிறைந்த தூய தீர்த்தத்தால் இந்திரனை வஸுக்கள் அபிஷேகம் செய்தவாறு மானிட சிரேஷ்டரான ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் செய்தார்கள்.

(36)

आयुष्य-मारोग्यकरं यशस्यं सौभ्रातृकं बुद्धिकरं शुभं च ।
श्रोतव्य-मेतन्नियमेन सद्भिराख्यान-मोजस्करं ऋद्धिकामैः ।।

ஆயுஷ்ய-மாரோக்யகரம் யசஸ்யம் ஸௌப்ராத்ருகம் புத்திகரம் சுபம் ச ।
ச்ரோதவ்ய-மேதந்நியமேன ஸத்பிராக்க்யான-மோஜஸ்கரம் ருத்திகாமை: ॥

ஆயுளையும் ஆரோக்கியத்தையும் புகழையும் வளர்ப்பது, சகோதர ஒற்றுமையை வளர்ப்பது, நல்ல புத்தியையும் மங்களத்தையும் வீரியத்தையும் அளிப்பது இந்த ஆக்கியானம். நன்மையின் நிறைவை விரும்பும் நல்லோர்களால் இது பக்தி சிரத்தையுடன் கேட்கப்பட வேண்டும்.

பாராயண ஸமாபனம்

(37)

स्वस्ति प्रजाभ्यः परिपालयन्तां
न्याय्येन मार्गेण महीं महीशाः ।
गोब्राह्मणेभ्यः शुभमस्तु नित्यं
लोकाः समस्ताः सुखिनो भवन्तु ।।

ஸ்வஸ்தி ப்ரஜாப்ப்ய: பரிபாலயந்தாம்
ந்யாய்யேன மார்க்கேண மஹீம் மஹீசா: ।
கோப்ராஹ்மணேப்ப்ய: சுபமஸ்து நித்யம்
லோகா: ஸமஸ்தா: ஸுகினோ பவந்து ॥

பிரஜைகளுக்கு மங்களமுண்டாகட்டும். பூபாலர்கள் பூமியை நியாய மார்க்கத்தில் பரிபாலிக்கட்டும். பசுக்களுக்கும் அந்தணர்களுக்கும் எப்பொழுதும் நன்மை நிலைத்திருக்கட்டும். உலகில் எல்லோரும் சுகமாக வாழட்டும்.

## (38)

रामाय रामभद्राय रामचन्द्राय वेधसे ।
रघुनाथाय नाथाय सीतायाः पतये नमः ।।

ராமாய ராமபத்ராய ராமசந்த்ராய வேதஸே ।
ரகுநாதாய நாதாய ஸீதாயா: பதயே நம: ॥

ஸ்ரீராமருக்கு, ராமபத்திரருக்கு ராமச்சந்திரருக்கு, வேதநாயகருக்கு, ரகுநாதருக்கு, உலகநாதருக்கு ஸீதாநாயகருக்கு நமஸ்காரம், மங்களம்.

## (39)

कायेन वाचा मनसेन्द्रियैर्वा बुद्ध्यात्मना वा प्रकृतेः स्वभावात् ।
करोमि यद्यत् सकलं परस्मै नारायणायेति समर्पयामि ।।

காயேன வாசா மனஸேந்த்ரியைர்வா புத்த்யாத்மனா வா ப்ரக்ருதே: ஸ்வபாவாத் ।
கரோமி யத்யத் ஸகலம் பரஸ்மை நாராயணாயேதி ஸமர்ப்பயாமி ॥

உடலாலோ வாக்காலோ மனதாலோ இந்திரியங்களாலோ புத்தியாலோ ஆத்மாவாலோ பிரகிருதியின் சுபாவத்தாலோ எந்தெந்தக் காரியம் நான் செய்கிறேனோ அதையெல்லாம் பரமாத்மாவான நாராயணனுக்கே என்று ஸமர்ப்பணம் செய்கிறேன்.

## (40)

असाध्य-साधक स्वामिन् असाध्यं तव किं वद ।
रामदूत दयासिन्धो मत् कार्यं साधय प्रभो ।।

அஸாத்ய-ஸாதக ஸ்வாமின் அஸாத்யம் தவ கிம் வத ।
ராமதூத தயாஸிந்தோ மத் கார்யம் ஸாதய ப்ரபோ ॥

கருணைக்கடலான ஸ்ரீராமதூதரே! அஸாத்தியத்தை ஸாதிக்கும் ஸ்வாமியே! உமக்குச் செய்ய முடியாதது எது இருக்கிறது, கூறும் பிரபுவே! என்னுடைய காரியத்தையும் பூர்த்தி செய்தருள்வீராக.

— —❋— —

श्रीराम जयराम जय जय राम
ஸ்ரீராம ஜயராம ஜய ஜய ராம.

# ஸ்ரீ ஹநுமத்க்ருத — ஸீதாராம ஸ்தோத்ரம்

1. அயோத்யாபுர நேதாரம் மிதிலாபுர-நாயிகாம் |
ராகவாணுமலங்காரம் வைதேஹாணு-மலங்க்ரியாம் |

2. ரகூணும் குலதீபஞ்ச நிமீணும் குலதீபிகாம் |
ஸூர்யவம்ச ஸமுத்பூதம் ஸோமவம்ச-ஸமுத்பவாம் ||

3. புத்ரம் தசரதஸ்யாத்யம் புத்ரீம் ஜனகபூபதே : ||
வஸிஷ்டானுமதாசாரம் சதானந்த-மதானுகாம் |

4. கௌஸல்யா-கர்ப்பஸம்பூதம் வேதிகர்ப்போதிதாம்
ஸ்வயம் |
புண்டரீகவிசாலாக்ஷம் ஸ்புர-திந்தீவரேக்ஷணும் ||

5. சந்த்ர-காந்தானணும்போஜம் சந்த்ரபிம்போபமானணும் |
மத்த-மாதங்க-கமனம் மத்தஹம்ஸவதூகதாம் ||

6. சந்தனார்த்ரபுஜாமத்யம் குங்குமார்த்ர-குசஸ்தலீம் |
சாபாலங்க்ருத-ஹஸ்தாப்ஜம் பத்மாலங்க்ருத-
பாணிகாம் |

7. சரணுகத-கோப்தாரம் ப்ரணிபாத-ப்ரஸாதிகாம் |
காலமேகநிபம் ராமம் கார்த்தஸ்வர-ஸமப்ரபாம் |

8. திவ்யஸிம்ஹாஸனுஸீனம் திவ்யவஸ்த்ர-பூஷணும் |
அனுக்ஷணம் கடாக்ஷாப்யாம் அன்யோன்ய-
யேக்ஷண-காங்க்ஷிணௌ

9. அன்யோன்ய-ஸத்ருசாகாரௌ த்ரைலோக்ய
க்ருஹதம்பதீ |
இமௌ யுவாம் ப்ரணம்யாஹம் பஜாம்யத்ய
க்ருதார்த்ததாம் |

10. அநேந ஸ்தௌதி ய : ஸ்துத்யம்
ராமம் ஸீதாஞ்ச பக்தித : |
தஸ்ய தௌ தனுதாம் புண்யா : ஸம்பத :
ஸகலார்த்ததா : |

11. ஏவம் ஸ்ரீராமசந்த்ரஸ்ய ஜானக்யாச்ச
விசேஷத : |
க்ருதம் ஹனூமதா புண்யம்
ஸ்தோத்ரம் ஸத்யோ விமுக்தித : |
ய : படேத் ப்ராதருத்தாய ஸர்வான்
காமானவாப்னுயாத் ||
இதிஹனுமத்க்ருத-ஸீதாராமஸ்தோத்ரம்
ஸம்பூர்ணம்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய

ஸ்வாமிகளின் ஆணைப்படி

# காமகோடி

(ஆன்மீக மாத இதழ்)

சென்னையிலிருந்து வெளிவருகிறது

கௌரவ ஆசிரியர்

மஞ்சக்குடி ஸ்ரீராஜகோபால சாஸ்திரிகள்

தனிப்பிரதி ரூ. 2/-    ஆண்டு சந்தா ரூ. 24/-

ஆயுள் சந்தா ரூ. 250

---

விவரங்களுக்கு :

மானேஜர், 'காமகோடி'

18, ஸ்டேஷன் ரோடு, மேல மாம்பலம்

சென்னை-600 033